# முதலைச் சட்டை

எஸ். கமலாம்பாள்

சூரியன் அஸ்தமமாகும் நேரம். என்றும் போல் நீண்ட கரைப் பாலத்தின் அருகாமையிலுள்ள இடங்கள் இன்றும் மிக்க ரமணீய மாக இருக்கின்றன. கண்ணுக்கெட்டின தூரம் வரையில் ஜலப் பிரளயம் கவலையற்று சந்தோஷமாகக் கொந்தளித்துச் சுருண்டு விழுந்து கொண்டிருக்கிறது.

இளநீலப் பட்டாடை அழகு பெற உடுத்தி நிற்கும் ஓர் இளம் பெண்ணுக்கு இடுப்பில் வயிரத்தால் இழைத்த ஒரு ஆபரணம் அணிவித்தால் அவளின் அழகை இன்னும் எவ்வளவு அதிகமாய் எடுத்துக் காட்டுமோ, அதேபோல் இப்பெரும் இளநீலத்திரைக் கடலுக்கு, நீண்ட கரைப் பாலம் ஒரு ஒட்டியாணம் போல் தோன்றும். நாலு மைல் நீளமாக இருக்கும் இப்பாலம் மனிதருக்குப் போக்கு வரவுக்கு மிக்க சௌகரியமாய் இருப்பது மல்லாமல், சாயங்கால வேளையில் காற்று வாங்க உலாவுவதற்கும் உதவுகிறது.

சேதுலக்ஷிமிபாய் திருமனசு கொண்டு ரீஜண்டாய் இருக்கும் போது அமைத்த இப்பாலம், கொல்லத்துக்கும் மாவேலிக் கரைக்கும் போகும் வழியில் இருக்கிறது. அதை அடுத்த ஊர்களின் இயற்கை அழகே அழகு. சூரிய உதய அஸ்தமனம் அவ்விடத்தில் தான் பார்க்க வேண்டும். கடல் ஓரத்தில் நிற்கும் தென்னை மரங்களே ஒரு சிறு வீடு என்று சொல்லலாம். எவ்வளவு பெரிய மழை வந்தாலும் அதன் அடியில் ஒரு துளி தண்ணீர் கூட விழாது. அவ்வளவு அடர்த்தியாய், செழிப்பாய், காய்த்து நிற்பதை, விரித்துப் பிடித்த ஓர் தென்னை மரக் குடை என்றே சொல்ல வேண்டும்.

அம்மரங்களின் மத்தியில் அஸ்தமனச் சூரியனின் செக்கச் சிவந்த தகடு போன்ற ரூபம், பச்சைக் கோடிட்டது போல் தென்னை மடல் ஓலைகளினூடு தெரியும். வெகு திறமையான செப்படி வித்தைக் காரன் தன் மாய வித்தைகளால் சிறிது நேரம் ஜனங்களை மயக்குவது போல், சூரியனும் தன் மாயாஜால செங்கதிர் வித்தைகளை ஆகாசத்திலும் தென்னை மரங்களுக்கு இடைவழியாகவும் காண்பித்து மனிதரை மயக்குகிறது.

இப்படியாக இயற்கையோடு கூடிய செயற்கைப் பாலமும், அவ்வழியாக நடக்கிறவர்களைச் சிறிது நேரம் பின் தங்கி மெதுவாக நடக்கச் செய்யும். இவ்வளவு அழகான பாலம் இருக்கும் இந்த இடத்தில் கொஞ்ச வருஷங்களுக்கு முன் சங்நாடம் என்ற (இரு படகுகளைக் கூட்டி நடுவில் பலகைகள் அடுக்கிய) ஒரு படகு இருந்தது. அதில்தான் ஜனங்களோ, வண்டிகளோ, காரோ எது வானாலும் வைத்து மூங்கிலால் தண்டு வலித்து மறுகரை செல்வார்கள்.

இந்த சங்நாடத்தில் ஏறிப்போய் மறுகரை சேர்ந்த எனக்குத் தண்ணீர்த் தாகம் தொண்டையை உலரச் செய்தது. நாலா பக்கமும் திரும்பிப் பார்த்தேன். இவ்வளவு ஜலம் கிடந்தும் தாகத்திற்கு ஒரு வாய் தண்ணீர்கூடப் பிரயோஜன மில்லாமல் இருக்கிறதே என்று வருத்தப்பட்டுக் கொண்டே மேலும் நடந்தேன். ஆனால் கடல் ஓரத்தில் நிற்கும் தென்னை மரங்களின் இளநீர்க் குலை கை எட்டிப் பறிக்கும் உயரத்தில் இருந்தது. ஒரு இளநீரையாவது பறித்துச் சாப்பிடலாமென்று நினைத்து அவ்விடத்தில் சிறிது நின்று கவனித்தேன். அப்போது ஓர் தோட்டத்தில் ஓர் கிழவன் இருந்து கயிறு செய்வதற்காகத் தென்னை நார்களைக் கூட்டிப்போட்டு ஒரு கம்பால் அடித்துக் கொண்டிருந்தான். அவனிடம் சென்று இந்தத் தோட்டம் யாருடையது என்று கேட்டேன். திடீர் அறிமுகமில்லாத ஒருவன் வந்து இப்படிக் கேட்கிறானே என்று அந்தக் கிழவனும் ''ஏன்?'' என்று பதில் கேள்வியை உடன் போட்டான்.

''எனக்குத் தண்ணீர்த் தாகம் நாக்கு வரளுகிறது. வெகுதூரம் நடந்து வருகிறேன். ஒரு இளநி பறித்துச் சாப்பிடலாமா?'' என்றேன்.

''ஓ! அதற்கென்ன! ஒன்று அல்ல, எத்தனை வேண்டு மானாலும் சாப்பிடுவதைப் பற்றித் தடை இல்லை. தோட்டமும் என்னுடையதுதான். தாகத்தோடு வருகிறவர்களுக்குத் தாக சாந்தி யாக இந்தத் தென்னை இளநி பிரயோஜனப்படுவது தான் எனக்கு மிக்க சந்தோஷம்.''

''தங்களுடைய இவ்வொரு வார்த்தைக்கே நான் ரொம்ப நன்றி உள்ளவனாய் இருக்கிறேன்!'' என்று சொல்லிவிட்டு இரண்டு இளநி பறித்து அவருக்கு ஒன்றை உரித்துக் கொடுத்து நானும் ஒன்று சாப்பிட்டேன். எனது தாகமும், களைப்பும் இருந்தவிடம் தெரியாமல் எங்கு பறந்து சென்றதோ நான் அறியேன். எனக்கு இன்னும் கொஞ்ச நேரம் அந்த கிழவரோடு பேச வேண்டும் போல் தோன்றிற்று. மேல் வேஷ்டியை அந்த வெண்மையான மணலில் விரித்துப் படுத்து ஏதேதோ பேசிக் கொண்டிருந்தோம்.

அவருக்கு நான் அருகில் இருந்து பேசிக் கொண்டிருப்பது அவர் செய்யும் ஜோலிக்குச் சிரமம் தெரியாமல் இருப்பதாகவும் தெரிவித்தார். நானும் இந்த இடமே ஓர் தனி சுகத்தைக் கொடுக் கிறது. இது பட்டணங்களுக்குப் பக்கத்தில் இருந்தால், இன்னும் செயற்கையோடு இவ்விடங்கள் எவ்வளவு அழகாய் இருக்கு மென்றெல்லாம் பேசிக் கொண்டு இருக்கும்போது, அவர் இடை மறித்து, ''செயற்கை என்கிறாயே. இவ்விடத்து இயற்கையில் நடந்த ஓர் மெய்க்கதையைச் சொல்லுகிறேன் கேள். எவ்வளவு நல்ல சம்பவம் தெரியுமா?'' என்று ஆரம்பித்தார். நானும் வெறும் வாய்ப் பேச்சிற்கே ரொம்ப சுகத்தைக் கொடுக்கும் இந்த இடம், கதை கேட்க இன்னும் எவ்வளவு சுகமாய் இருக்கும் என்று, அவர் கதையைக் கேட்க ஆவலோடு எதிர்பார்த்து இருந்தேன்.

''அறுபது வருஷங்களுக்கு முன் இங்கு இருபத்து மூன்றாவது பிராயத்தில் ஒருவர் இருந்தார். சிறிது ஆஸ்தியுள்ளவர்தான். நாலு பக்கமும் தென்னை மரங்களும், கமுகுகளும் வளர்ந்த தோட்டத்தின் மத்தியில் ஒரு சாதாரணச் சிறு வீடு. அதில்தான் அவரும், அவர் மனைவியும், ஒரு பெண் குழந்தையும் வசித்து வந்தார்கள். அவர்களுக்கு அந்த ஒரே ஒரு பெண் குழந்தைதான் இருந்தது. அதைத் தாய் தகப்பன் இருவரும் மிக்க செல்லமாய் வளர்த்து வந்தார்கள். அக்குழந்தையும் நாளொரு மேனியும், பொழுது ஒரு வண்ணமுமாக வளர்ந்து பதினாறாவது பிராயத்தை முற்றும் பெற்று மிக்க அழகோடு இருந்தது. அவள் பெயர் கூட ஓமனைதான் (மலையாளத்தில் ஓமனை என்றால் அழகு என்று சொல்லுவார்கள்).

அவள் மாலை நேரங்களில் தோட்டத்தில் நிற்பதைப் பார்த்தால், பச்சை இலைகளின் மத்தியில் நிற்கும் விரிந்த ரோஜா மலரைப் போல் இருக்கும். அவளுடைய அழகைக் கண்டும், கேட்டும் எத்தனையோ பெரிய பெரிய இடங்களில் இருந் தெல்லாம் அவளைக் கலியாணம் செய்வதற்கு ஆட்கள் வந்தும், அவள் பெற்றோர் ஒன்றிற்கும் உடன்படாமல், கலியாணம் பண்ணிக் கொடுத்தால் குழந்தை நம்மை விட்டுப் பிரிந்துவிடுமே, அவள் இளமையும் அழகும் மறைந்து விடுமே யென்ற அசட்டுப் பயத்தால் என்ன செய்வது என்று அறியாது தவித்துக் கொண்டு இருந்தார்கள்.

ஒரு நாள் ஓமனை தோட்டத்தில் உலாவிக் கொண்டிருக்கும் போது காயலில் யாரோ ஒரு யௌவன வாலிபன் கை கால் அலம்பிக் கொண்டு நிற்பதைப் பார்த்தாள். அவன் யார் என்று

அறிய வேண்டுமென்று, அவன் அறியாது சிறிது மறைவாகக் காயல் ஓரத்திற்குச் சென்றாள். குனிந்து முகம் கழுவிக் கொண்டிருந்த அவ்வாலிபன், நிமிர்ந்ததும் இவளைப் பார்த்து விட்டான். அழகே உருவமாக நிற்கும் இவள் யார் என்று தன் மனதினிடமே கேள்வி கேட்பது போல் சிறிது நேரம் மௌனமாய் அவளை நோக்கிய வண்ணம் நின்றுவிட்டான்.

அவள் முன்பின் ஆலோசிக்காமல் இவ்வளவு பக்கத்தில் வந்தது தப்பு என்ற பயத்தாலும், வெட்கத்தாலும் வேறு எதையோ யோசிப்பதுபோல் காயலுக்குப் பக்கத்தில் தொட்டும் தொடாமலும் கிடக்கும் சமுத்திரத்தை நோக்கி நின்றாள்.

சிறிது நேரத்துக்குள் மௌனம் கலைந்த அவ்வாலிபனும் தண்ணீரில் இருந்து கரை வந்து, ''நீ யார்? உன் தாய், தகப்பன் யார்? எங்கு தாமஸிக்கிறாய்?'' என்று கேள்விகளை ஒன்றுக்கு மேல் ஒன்றாய் அடுக்கிக் கொண்டு வந்தான்.

ஓமனையும் தன்னை யாராவது கவனிக்கிறார்களாவென்று ஒரு தடவை நாலு பக்கமும் சுற்றிப் பார்த்துவிட்டு, மெல்ல, ''நான் இதோ காணுகிற வீட்டில்தான் தாமஸிக்கிறேன். அங்குதான் என் பெற்றோர்ரும் இருக்கிறார்கள். நீங்கள் யார்?'' என்றாள்.

''நானும் இதற்குப் பக்கத்து ஊரில்தான் தாமஸிக்கிறேன். இன்று ஏதோ இப்பக்கமாக உலாவ வேண்டும் போல் இருந்தது. அதற்காக வந்தேன்,'' என்றான்.

பிறகு இருவரும் என்ன பேசுவது என்று அறியாமல் ஒருவர் முகத்தை ஒருவர் நோக்கி மௌனமாய் நின்றனர்.

''நேரமாகிறது. நான் போகிறேன். அப்பா அம்மா தேடு வார்கள்!'' என்று சொல்லி ஓமனை திரும்பப் பார்த்தாள்.

''இன்னும் கொஞ்ச நேரம் சென்று போனால் போதாதா? உனக்கு வீடு இதோ பக்கத்தில் தானே இருக்கிறது. போகலாம், இரு.''

''யாராவது வந்து விடுவார்கள். எனக்குப் பயமாக இருக்கிறது. நான் போகிறேன்.''

''நீ அடிக்கடி சாயங்காலம் இங்கு வருவது வழக்கமோ?'' என்றான் அவ்வாலிபன்.

''இங்கு வரவேண்டும் என்று கட்டாயமா? இஷ்டமிருந்தால் வருவேன்,'' என்று சொல்லிவிட்டு அவள் வீட்டிற்குத் திரும்பி னாள். அவ்வாலிபனும் தன் இருப்பிடத்தை நோக்கிப் புறப்பட்டான்.

ஓமனைக்கு அவனை விட்டுப் பிரிந்து செல்ல மனமில்லை. அவன் மறையுமளவும் திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டே சென்றாள். அவன் போகும்போது காயல் ஓரத்தில் உள்ள பாறையிலிருந்து எதையோ ஒரு தோலை எடுத்ததை ஓமனை பார்த்து விட்டாள். ஆனால் அவள் அவ்விடத்திலே பிறந்து வளர்ந்து வந்திருப்பதால் அந்தத் தோல் எதனுடையது என்பதைத் தூரத்தில் இருந்தே அறிந்து கொண்டாள். ''எதற்காக அவன் அந்தத் தோலை எடுத்துச் செல்ல வேண்டும்? எதற்காக அதைக் காய வைக்க வேண்டும்?'' என்றெல்லாம் ஆலோசித்துக் கொண்டே வீடு சென்றாள்.

என்றையும் விட அன்று சிறிது நேரமாகி வீட்டிற்குச் சென்றதனால் தாய் தகப்பன் இருவரும், ''ஏன் அம்மா இவ்வளவு நேரம்?'' என்று கேட்டார்கள்.



''ஒன்றுமில்லை. காயலில் மீன்கள் விளையாடுவதைப் பார்த்துக் கொண்டே இருந்து விட்டேன்!'' என்று சொல்லிவிட்டுத் தன் அறைக்குச் சென்று ஏதோ வாசிக்கும் பாவனையில் ஒரு புஸ்தகத்தைக் கையில் பிடித்துக் கொண்டு அவ்வாலிபனையே நினைத்துக் கொண்டிருந்தாள்.

மறுநாள் மாலை எப்பொழுது வரும், எப்பொழுது அவரைச் சந்திக்க முடியும், என்ன பேசுவது, நாளை அவரை அதே இடத்திலேயே சந்திப்போமா, அவர் யாரோ, எவரோ, அவரை நான் சந்தித்தால் என் பெற்றோர், பாவம்! என்ன வருத்தப்படுவார்கள் என்றெல்லாம் மனதில் நினைத்துக் கொண்டிருக்கும் போது, அம்மா சாப்பிடக் கூப்பிடும் சப்தம் கேட்டு எழுந்து சென்று விட்டாள்.

அன்று சாப்பிடும்பொழுது ஓமனை பின்வருமாறு கேட்டாள்:-
''அம்மா! நான் ஒரு கதையைப் புஸ்தகத்தில் வாசித்தேன். அதிலே ஒரு பெண் ஒருவனைக் காதலிக்கிறாள். ஆனால் அந்தப் பெண்ணின் பெற்றோருக்கு அவளை அவனுக்குக்-கொடுக்க இஷ்டமில்லை. அந்தப் பெண்ணோ சதா அவனை நினைத்தே வருந்துகிறது. அந்த நிலையில் பெற்றோர் வேறு யாருக்கோ கலியாணம் செய்து கொடுக்க ஏற்பாடு செய்கிறார்கள். பாவம்! அந்தப் பெண் உயிரையே விட்டு விட்டதாம்! என்ன அநியாயம்! பெண்ணை அவள் காதலிக்கிற புருஷனுக்கே கொடுத்தால் என்ன?'' என்று கேட்டாள்.

அதற்கு அவள் பெற்றோர், ''அது ஒரு அசடு. அதனாலேதான் உடனே இறந்து விட்டது. மகளுக்குப் புருஷன் தேடுவது பெற்றோர்

கடமை. அது போக, அது யாரோ ஒருவனை நினைத்து உயிர் விட வேண்டுமானால், அவளைப் போல் முட்டாள் இல்லை என்று தான் சொல்ல வேண்டும்!'' என்றார்கள்.

இவ்வார்த்தைகளைக் கேட்ட அவளுக்கு எப்படி இருந் திருக்கும்? அவள் உள்ளத்திலே காரணம் கூற முடியாத விசனம் எழுந்தது.

பிறகு ஒன்றும் பேச மனமில்லாமல், நன்றாகக் கூடச் சாப்பிடாது தன் அறையில் சென்று படுத்து, இதையே நினைத்துத் தன் மனதோடு போராடிக் கொண்டே தூங்கி விட்டாள்.

மறு நாள் மாலை நேரம் ஆக ஆக, அவளால் அவன் உருவத்தை மறக்க முடியவில்லை. 'அவரையாவது சந்தித்து அவருடைய மனமும் அறியலாம்,' என்று காயல் ஓரம் சென்றாள். அங்கு அவன் வந்து சிறிது நேரம் ஆயிற்று என்பது போல் ஒரு பாறையில் உட்கார்ந்து தான் வரும் திசையே நோக்கி இருப்பதை ஓமனை கண்டாள். அவனைப் பார்த்த அளவிலே அவள் மனதில் கிடந்த ஏதோ ஒரு பெரிய கவலையே மறந்து விட்டது போல் முகம் ஓர் புன்னகையால் மலர்ந்தது. ஆனால் அவன் சமீபத்தில் போகப் போக, ஒருவிதப் பயம் வீட்டை அடிக்கடி திரும்பிப் பார்க்கச் செய்தது.

''நேற்றுப் போனதிலிருந்து உன்னை மறுபடியும் பார்க்க வேண்டுமென்ற ஆசை கட்டுக்கடங்காமல் வளர்ந்தது. நீ ஒரு வேளை இங்கு வந்தால் பார்க்கலாமே என்ற ஆசையில் வந்தேன்,'' என்று தன் வரவிற்கு மன்னிப்புக் கூறுபவன் போல் சிறிது தயங்கிப் பேசினான் அவ்வாலிபன்.

ஓமனை அவன் வரவை மிகவும் எதிர் பார்த்திருந்தாள் என்பதை அவளது முகமே காண்பித்தது.

'உட்காறேன், ஓமனை! ஏன் நிற்கிறாய்?' என்றான் அவ் வாலிபன்.

பயத்துடன் வந்த திசையை வெறிக்கப் பார்த்துவிட்டு, மெது வாகப் பாறையின் ஓரத்தில் உட்கார்ந்தாள்.

சிறிது நேரம் மௌனமாக இருந்தனர்.

அவ்வாலிபன் ஏதோ சொல்ல வாயெடுத்தவன் போல, ''ஓமனை!.....'' என்று வாயெடுத்து விட்டுத் தயங்கினான்.

ஓமனை மெதுவாக, ''என்ன?'' என்றாள்.

''ஓமனை, உன்னிடம் ஒன்று கேட்பேன். கோபித்துக் கொள்ளு வாயோ?'' என்று கண்களில் ஆவல் ததும்பக் கேட்டான்.

அவளும் தலைகுனிந்து, ''நீங்கள் என்ன கேட்கப் போகிறீர்கள் என்பது எனக்குத் தெரியும்,'' என்றாள்.

அவ்வாலிபன் எழுந்து நின்று, ''அப்படியானால்.....'' என்று மிகுந்த சந்தோஷத்துடன் அவளை ஆலிங்கனம் செய்து கொள்ளக் கரங்களை விரித்தான்.

''அப்பா அம்மா ஒப்புக் கொள்ள வேண்டுமே!'' என்று அவள் இரண்டடி பின்னிடைந்தாள். அப்பொழுது அவளை ஆசை அவன் வசம் தள்ளியதென்றாலும், முந்திய நாள் அவள் பெற்றோர் கூறிய அபிப்பிராயம் அவளுக்குப் பயமூட்டியது. இருதலைக் கொள்ளி எறும்பு போலானாள்.

''ஓமனை! நம் இருவருடைய வாழ்வையும் பாழ்படுத்தி விடாதே! பெற்றோர் முதலில் வருந்துவர். அவர்களுக்கு முதலில் என்ன விஸ்தரித்தாலும் அர்த்தமாகாது. முதலில் என்னுடன் வந்துவிடு! பயப்படலாகாது. தைரியம் வேண்டும். நம் வாழ்வில் நம்பிக்கை வேண்டும்!'' என்று ஆவேசத்துடன் பேசினான்.



''பெற்றோர்!'' என்றாள் மறுபடியும்.

''பெற்றோர் சில விஷயங்களின் சக்தியை அளக்கத் திறமை யற்றவர்கள். ஆனால் நீண்ட நாள் அனுபவத்தினால் உண்மையை அறிந்து மாறக் கூடியவர்கள்!'' என்றான்.

அவளும் இசைந்தாள்.

பெற்றோருடன் வசித்த ஸ்தலத்தை ஒரு ஏக்கத்துடன் பார்த்து விட்டு அவனுடன் சென்றாள்.

அவன், பாறையில் கிடந்ததை, அதற்கு முந்திய நாள் போல் எடுத்துக் கொண்டு சென்றான்.

''அதை ஏன் தூக்கிச் சுமக்கிறீர்கள்? நேற்றே கவனித்தேன்!'' என்றாள் ஓமனை.

''சில விஷயங்கள் உனக்கும் புரியாது. கண்ணா! அதைப் பற்றி உனக்குத் தெரிய வேண்டிய காலம் வரும். அப்பொழுது தானே தெரிந்து விடும். ஆனால் என்னை நம்ப வேண்டும்!'' என்றான்.

அஸ்தமன சூரிய கிரணம் அவளது அசையாத நம்பிக்கையைக் காண்பிப்பது போல முகத்தில் விழுந்தது. இருவரும் புதர் வழியாக மறைந்தனர்.

* * *

நேரம் மணி எட்டு இருக்கும். நல்ல அமாவாசை யிருட்டு. வானத்தில் நட்சத்திரங்கள் கணக்கில்லாமல் மின்னிக் கொண் டிருந்தன. இருவரும் அவ்வாலிபன் வசிக்குமிடத்தையடைந்தனர். அதை வீடு என்றும் சொல்ல முடியாது; மாளிகையுமல்ல. ஆனால் இவற்றின் இரண்டு வசதிகளையும் உடைய ஒரு குகை. ஓமனையின் கைகால் ஜில் என்று குளிர்ந்து இருந்தது. மேலும் அவள் களைப்புற்று இருந்தாள். அவளை ஒரு கட்டிலில் படுக்க வைத்து விட்டு விளக்கை ஏற்றினான்.

அறையின் ஒரு புறத்தில் பழங்களும் பாலும் வைக்கப் பட்டிருந்தன. அவற்றை எடுத்து வந்து அவளுக்குக் கொடுத்துச் சாப்பிடச் செய்து களைப்பைப் போக்கினான்.

அன்று முதல் ஓமனையின் வாழ்வில் ஒரு புது மாறுதல் தோன்றிற்று. அதில் தன்னையும் மறந்தாள்.

இப்படிக் கொஞ்ச காலம் கழிந்தது. புது வாழ்வில் ஒரு நிதானம் ஏற்பட்டு வாழ்க்கை சமமாக ஓடிற்று. பழைய நினைவுகள் முளைத்தன. பெற்றோர் நினைவு அவளைக் கனவிலும் பீடித்து வளர ஆரம்பித்தது.

அன்று அவ்வாலிபனுக்குத் தூக்கமே வரவில்லை. ''இவள் இப்படிப் பெற்றோரை விட்டுப் பிரிந்ததையே நினைக்க ஆரம்பித்து விட்டாள். இதற்கு என்ன செய்வது? அவள் பெற்றோரையும் நானே சந்தித்து அழைத்து வந்து விடுவதாக அவளுக்குச் சொன்னேனே. அவர்களை நான் எப்படிச் சந்திக்க முடியும்?'' இப்படி எல்லாம் யோசித்துக் கொண்டே வெகு நேரம் சென்று தூங்கினான்.

மறுநாள் ஓமனை கொஞ்சம் சந்தோஷமாக இருந்தாலும், அடிக்கடி பெற்றோர் நினைப்பால் சிறிது வருத்தப்பட்டுக் கொண்டும் இருந்தாள். இப்படியாகக் கொஞ்ச நாட்கள் சென்று விட்டன. ஒரு நாள் ஓமனை அவ்வாலிபனைப் பார்த்து.

''தாங்கள் என் பெற்றோரைச் சந்தித்து அழைத்து வருவதாகச் சொன்னீர்களே, அவர்களைப் பார்த்தீர்களா? எப்படி இருக் கிறார்கள்?''

''இல்லை, சாவகாசமாய்ப் போகலாம் என்று இருக்கிறேன்.''

''சரி, பாவம்! எப்படி வருத்தப் படுகிறார்களோ!'' என்று சொல்லிவிட்டு ஏதோ வீட்டு வேலைகளைக் கவனிக்கச் சென்று விட்டாள்.

நாட்களும் ஒவ்வொன்றாய் ஒரு மாதம் ஆயிற்று. இவளுடைய பெற்றோர் அன்று விளக்கு வைக்கும் சமயம் ஆகியும் மகளை வீட்டிற்கு வரக் காணாததினால், அவளைக் கூப்பிட்டுக் கொண்டே தோட்டமெல்லாம் சுற்றிப் பார்த்தும், பக்கத்து வீடுகளிலெல்லாம் விசாரித்தும் காணாமல், ஒரு வேளை காயலில் கால் தவறி விழுந்து விட்டாளோவென்று சந்தேகித்து, சில செம்படவர்களை அழைத்து காயலில் வலை போட்டும் ஆள் முங்கியும் பார்க்கச் செய்தார்கள். அங்கும் அகப்படவில்லை. இந்த ஒரு மாத காலமாய் எங்கெல்லாமோ தேடியும் மகளைக் காணாத வருத்தத்தால் பெற்றோர் நாளுக்கு நாள் ஊண் உறக்கமின்றி இதே கவலையாகப் பலவீன மடைந்து கொண்டே வந்தார்கள். ஆனால் அவர்கள் மகளைத் தேடும் விஷயத்தை இன்னும் நிறுத்த வில்லை. எந்த எந்த விதமெல்லாமோ மகளைப் பற்றி விசாரித்துக் கொண்டேதான் இருக்கிறார்கள்.



மகளை விட்டுப் பிரிந்த பின், அவர்களுக்கு அந்த வீட்டில் இருக்க மனமில்லாது, பக்கத்தூரில் சென்று தாமஸிக்கலாமென்று அவ்விடத்தை விற்றுத் தொலைத்து விட்டு, சாமான்களோடு ஒரு படகில் ஏறிக் காயல் வழியாக யாத்திரையும் தொடங்கினார்கள். படகும் ஊருக்கு வெளியில் வந்து சிறிது தூரம் சென்றபின் காயல் ஓரமாய் ஓர் பாறையில் ஒரு வழி இருப்பது போல் இவர்கள் பார்வையில் பட்டது. உடனே அவர்கள் இங்கு யாரோ ரிஷிகள் தாமஸிப்பார்கள் போல் தோன்றுகிறது, அவர்களை விசாரித்தால் ஏதாவது துப்புக் கிடைத்தாலும் கிடைக்குமென்று படகை அங்கு கரை அடுப்பிக்கச் சொன்னார்கள்.

படகும் கரைப் பக்கமாக வந்தது. கரை இறங்கு துறையல்ல. வெறும் இடுக்குகளும் தகர்ந்த மூலைகளும் நிறைந்த பாறை. படகு பாறையில் மோதிச் சேதமடையாதபடி சற்று தூரத்தில் நிறுத்திக் கொண்டு, தோணியைச் சிறிது சரித்து, பாறையின் மீது குதிக்க வேண்டும்.

வயதாலும், வருத்தத்தாலும் பலவீனமடைந்த பெற்றோருக்கு இது சிறிது கஷ்டமான வேலைதான். ஆனால் தோணிக்காரன் தைரியசாலி, பலமுள்ளவன். அவர்களைக் கரையேற்றிவிட்டான்.

இருவரும் தடியூன்றி நின்ற வண்ணம் சுற்றுமுற்றும் பார்த்தார்கள். மனித வாசத்திற்கு ஏற்ற இடம் அல்லவானாலும், அவ்விடத்தில் மனிதர் வாசம் செய்ய வேண்டும் என்று ஒரு காரணமும் இல்லாமல் அவர்கள் மனதில் பிறந்த நம்பிக்கை திட்டமாக வளர ஆரம்பித்தது.

பாறை கரைப்புறம் உயர்ந்து கொண்டே சென்று, சிறிது தூரத்தில் தென்படும் உயர்ந்த கருங்கல் பிண்டங்களுக்கு இடுக்கில் ஒரு சிறு பாதை போல் சென்று வளைந்தது.

அப்பொழுது அந்தி மயங்கும் சமயம். உயர்ந்து கருத்த பாறையின் பக்கத்தில் மட்டிலுமே சிறிது வெளிச்சம் தெரிந்தது.

குழந்தை ஆசையே உருவான பெற்றோரும் அவ்வழியாகச் சென்றனர்.

வழியும் போகப்போகக் குறுகிக் கொண்டே போய் ஓர் இருண்ட குகையின் வாசலில் விட்டது.

குகையின் வாசலில் சிறு கோலமும் மூலையில் ஒரு பழந் துணியும் கிடப்பது கண்டு, அவர்கள் நம்பிக்கை உறுதியாகி, ''இங்கு யார் இருக்கிறது?'' என்று உரத்துக் கூவிப் பார்த்தார்கள். பதில் ஒன்றும் வரவில்லை.

குகை வாசலோ இருட்டு; உள்ளே போகச் சிறிது தயங்கி னார்கள்.

பின்னும் மனதைத் திடப்படுத்திக் கொண்டு குகையுள் நுழைந்தார்கள்.

உள்ளே சென்றதுதான் தாமதம். அவர்களுக்கு ஆச்சரியம் தூக்கி வாரி யடித்தது.

அவர்கள் நுழைந்த இடம், வெளியைப் போல் கரடு முரடான தாக இருந்தாலும், அதன் வலப் புறத்தில் தோன்றிய அதிசயம் விவரிக்க முடியாதது. வலப்புறத்திலும் ஒரு வழி தென்பட்டது. அதற்கப்புறத்தில் அரச மாளிகை போல் அலங்காரம் செய்யப் பட்டுப் பார்ப்பதற்கு மிகவும் அழகான ஒரு இடம். நடுமத்தியில் தீப ஒளியின் பக்கத்தில் ஓர் சுந்தர புருஷனுடன் ஓமனை நிற்பதைக் கண்டார்கள். தங்கள் கண்களையே நம்பாமல் இது என்ன மந்திர வித்தையோ, மாயாஜாலமோ அல்லது மூளையின் தறி கெட்ட கோளாறோ என்று நினைத்துக் கண்களைத் துடைத்துக் கொண்டு மறுபடியும் பார்த்தார்கள். தெரிவது உண்மைதான்.

தங்களையறியாது, ''ஓமனை!'' என்று வாய் விட்டுக் கூப்பிட் டார்கள்.

உள்ளே நின்ற இருவரும், திடுக்கிட்டு விஷந் தீண்டியவர்கள் போல் துள்ளி விலகினார்கள்.

ஓமனைக்கு முதலில் காதுகளை நம்ப முடியவில்லை. இருட்டில் தெரிந்த மங்கிய உருவங்களைக் கூர்ந்து கவனித்தாள். பெற்றோர் என்றதும் சிறிது பயம் தட்டியது. வயது முதிர்ந்த இருவரும் வெளிச்சத்தில் வர, அவளுக்குப் பல நாட்களாகக் கட்டுக் கடங்காது வளர்ந்து கொண்டு வந்த ஆசை, பயத்தை நொடிப் பொழுதில் அகற்றியது.

''அம்மா! அப்பா!'' என்று கூவிக் கொண்டு அவர்கள் பக்கமாகப் பாய்ந்தாள்.

பிரிவும் ஆசையும் வெட்க மறியாது என்பார்கள். கிழவர் இரு வரும் அவளைக் கட்டி முத்தமிட்டுக் கொஞ்சினார்கள். நினைவு அவளை அவர்கள் கையில் எடுத்துக் கொஞ்சிய காலத்திற்குச் சென்றது என்று கூறலாம்.



பெற்றோருக்கு அவள் ஏன் சொல்லாது கொள்ளாது ஓடிவந்து இந்த நிர்மானுஷ்யமான பிரதேசத்தில் வசிக்கிறாள் என்றெல்லாம் கேட்க ஆசை. ஓமனைக்குச் சிறிது பயம், சிறிது நாணம். ஆனால் இங்கு வந்து வாழ்க்கை நடத்துவதைப் பற்றி விஸ்தரிக்க ஆசை. தன் கணவருக்குப் பெற்றோரை அறிமுகம் செய்து வைத்து, அவரைச் சமாதானம் செய்யும்படி, தன் மீது இருக்கும் குற்றத்தைக் குறைத்துக் கொள்ள வேண்டும் என்ற ஆசையினால் கணவன் நின்ற பக்கம் திரும்பி, ''இவர்கள்தான்...'' என்று ஆரம்பித்தாள். அவள் வார்த்தையை முடிக்கவில்லை. அவர் நின்ற இடத்தில் ஒரு பிரம்மாண்டமான முதலை கிடந்தது. அதன் பச்சைக் கண்கள் இவர்களையே பார்த்தது. முதலை அங்கு வரக் காரணமென்ன வென்று அவளுக்கு அர்த்தமாகவில்லை. பயந்து வீரிட்டாள். குழந்தையைக் கண்ட அதிசயத்தில் வேறு ஒன்றையும் கவனியாத பெற்றோர்களும் பயத்தால் பிரமித்துச், சித்தப் பிரமை கொண்ட வர்கள் போல் நின்றார்கள்.

முதலை பேசியது!

அதே குரல்; புருஷனின் குரல் என்று உணர்ந்தாள் ஓமனை.

''நான் என் ஆசைக்குரியவர் கண்களில்தான் சுய உருவில் வரலாம். மற்றவர்கள் கண்களுக்கு நான் இந்தக் குரூபியான முதலை தான். நான் ஓமனைக்கு மட்டும்தான் சுய உருவில் தோன்றுவேன்.''

''ஓமனையின் கணவன் மீது எங்களுக்கு ஆசை யிருக்காதா?'' என்றார்கள் பெற்றோர்கள்.

'எனக்கு உங்கள் மீது ஆசை யிருக்க வேண்டாமா?'' என்றது முதலை.

இதற்கு மேல் என்ன வாதம் இருக்கிறது? பெற்றோர்கள் வாயடைத்துப் போனது போல் பேசாதிருந்தார்கள்.

முதலை மெதுவாக வேறு ஒரு அறை போன்ற குகைக்குள் சென்றது. சென்றதும் அது சென்ற வாசலை ஒரு திரை மூடியது.

ஓமனையும் பெற்றோரும் நெடு நேரம் பேசாது முதலை போன திசையையே நோக்கியிருந்தார்கள்.

எப்படியும் ஓமனை வீட்டுக்காரி அல்லவா? வந்தவர்கள் பெற்றோராயினும் விருந்தினர்தானே. வழியில் எப்பொழுது சாப்பிட்டார்களோ? இதெல்லாம் அவளுக்கு நினைவு.

பெற்றோர்களிடம் சொல்லிக் கொள்ளாது ஓடி வந்தது மல்லாது, சுருக்கென்று தைக்கப் பேசும் முதலையின் மனைவியாக இவள் இருந்து வருவது, என்பன போன்ற எண்ணங்கள் திருப்தியாகச் சாப்பிடுவதைக் கெடுத்தன. ஓமனையும் பெற்றோரும் நெடுநேரம் பேசிக் கொண்டிருந்தனர்.

பிறகு ஓமனை படுக்கச் சென்றாள். அன்று அவளுக்குச் சிறிது வருத்தம்தான். இத்தனை நாள் மிகவும் சுந்தர புருஷன், காதலுக் கிசைந்தவன் என்று எல்லாம் நினைத்த ஒருவர், வெளியுலகத்திற்கு வெறும் முதலையாகக் காலம் கழிக்க வேண்டும் என்பதை அறிந்ததால் சிறிது ஏமாற்றம்.

அன்று படுத்து உறங்கும்பொழுது அவளது முதலைக் கணவன் அங்கு வரவில்லை. ஆனால் அவள் மனதிற்குள் ஒரு புதிய யோஜனை பிடிபட்டது.

முதலைச் சட்டையை அவள் அடிக்கடி பார்த்திருக்கிறாள். வெகுகாலம் அதன் அர்த்தம் புலப்படாது இருந்தது. அன்று நடந்த சம்பவத்திலிருந்து தன் கணவர் அன்னியர் கண்களில் படாமல் இருக்க, முதலைச் சட்டையினுள் புகுந்து கொள்கிறான் என்பது திட்டமாகப் பிடிபட்டது. முதலைச் சட்டையை எரித்துவிட்டால்? வெகு லேசான காரியம்; முதலில் செய்ய வேண்டிய வேலை என்று பட்டது. அந்த நினைவிலேயே தூங்கினாள்.

மறுநாள் விடியற்காலம். ஓமனை எழுந்திருக்கும்போது அவள் கணவனைக் காணவில்லை. ஆனால் முதலைச் சட்டை மட்டிலும் ஒரு மூலையில் இருந்தது. மெதுவாக வெளியே வந்தாள். அவளது பெற்றோர் மட்டிலும் வெளியே முதல் முற்றத்தில் முழங்கால்

களைக் கட்டிய வண்ணம் வருத்தம் தேங்கிய முகத்தினராக உட்கார்ந்திருந்தனர்.

அவர்களை இரகஸியமாக அழைத்துத் தனது யோசனையைக் கூறினாள். மூவரும் மெதுவாகச் சென்று அந்த முதலைச் சட்டையை எடுத்துக் கொண்டு குகை வாசலுக்குச் சென்று தீயிட்டு எரிக்க ஆரம்பித்தார்கள். தனது அழகான கணவனைப் பெற்றோருக்குக் காண்பிக்கலாம் என்ற ஆசையில் முதலில் தன் கையாலேயே அந்த அழகற்ற பயங்கரமான சட்டையை எடுத்துத் தீயினுள் போட்டாள். போட்டதுதான் தாமதம் - நெஞ்சில் யாரோ சுடு கங்கை கொண்டு இடித்தது போல் தூக்கிவாரிப் போட்டது. அவளது கைகளும், கால்களும் வெடவெடவென்று நடுங்குகின்றன. அதே சமயம் காயல் ஓரத்திலிருந்து யாரோ வீரிட்டு அலறும் சத்தம் கேட்டது.

ஓமனை உடனே தனது கணவனின் குரல் என்று கண்டு, அந்தத் திசையில் ஓடினாள். ஆம்! அவன்தான்! தரையில் விழுந்து துடித்துப் புரண்டு வீரிட்டு அலறிக் கொண்டிருந்தான். அவனது கால்கள் மட்டும் தகதகவென்று ஒரு காரணமும் இல்லாமல் கொழுந்துவிட்டு எரிந்து கொண்டு இருந்தன.



ஓமனை அவனை இழுத்துக் காயல் கரையோரம் கொண்டு சென்று தண்ணீரை ஊற்றித் தீயை அணைக்க முயன்றாள். தீ வேகமாக எரிய ஆரம்பித்தது. தண்ணீரிலேயே காலை அமுக்கினாள். அப்படியும் தீ அணைவதாக இல்லை. அதற்குள் முழங்கால் வரை வெந்து காயல் ஜலத்தில் சிறிது சாம்பலும் மிதந்து சென்றது. அவளது கணவன் பலவீனமான குரலில், ''யாரோ எனது முதலைச் சட்டையை எரிக்கிறார்கள்; என் உயிர் நிலை அதில்தான் இருக்கிறது. அதைப் போய்க் காப்பாற்று!'' என்றான்.

ஓமனைக்குப் பயம் அதிகரித்தது. நேராக முதலைச் சட்டை எரியுமிடத்திற்கு ஓடி, அதை வெளியில் இழுத்துப் போட்டாள். 'இவள் என்ன அசட்டுத்தனம் செய்கிறாள்!' என்று நினைத்து, அவளைத் தள்ளி விட்டு, அதை மறுபடியும் இழுத்துத் தீக்குள் போட்டு, ஒரு எரிகிற கொள்ளியையும் போட்டனர் பெற்றோர்.

ஓமனை துடித்துப் பதறிய வண்ணம் தன் புருஷன் உயிர் அதில்தான் இருக்கிறது என்பதைக் கூறினாள். அதே சமயம் காயல் கரையிலிருந்து வரும் சப்தமும் அதிகமாயிற்று; தீயில் முதலையின் பின் பாகம் பூராவாக எரிந்து போயிற்று.

ஓமனை பதறுவதைக் கண்டு பெற்றோர் இருவரும், அவளை நம்பாது, ஒரு பாறையில் ஏறிக் காயல் புறத்தை எட்டிப் பார்த்தனர்.

ஒரு சுந்தர புருஷன் இடுப்புவரை தீயால் தகிக்கப்பட்டுத் துள்ளித் துடிப்பதைக் கண்டு, கீழே இறங்கி ஓடிவந்து முதலைச் சட்டையை எடுத்துக் கொண்டு, தண்ணீர்க் கரையை நோக்கி ஓடினர். போகும் வேகத்தில் காற்றின் உதவியால் மதமதவென்று எரிய ஆரம்பித்தது.

அதற்குள் ஒரே பாய்ச்சலில் ஓமனை கணவனிடம் ஓடினாள்.

கிழவர்கள் அதைத் தண்ணீரில் அமிழ்த்தினார்கள். ஆனால் தீ கட்டு மீறி எரியத் தொடங்கிவிட்டது.

தனது முட்டாள் தனத்தால் தன் வாழ்விற்கே உலை வைத்துக் கொண்ட கெடுமதியைப் பொறுக்க மாட்டாதவளாய், மனம் இடிந்து புருஷனைக் கட்டிக் கொண்டாள். தீ அவளையும் சூழ்ந்தது. இருவரும் அக்னியுள் மறையும் பொழுது, அவள் உதடுகள் அவன் காதண்டையில் அசைந்தன. அவனுடைய மன்னிப்பைப் பெற்றோளோ என்னவோ!

ஆனால் அவ்விருவர் நினைவிற்கு ஒரு பிடி சாம்பல் கூட இல்லாதபடி காயல் கரைத்து விட்டது.

''கிழவர்கள் என்ன ஆனார்கள்?'' என்று கேட்டேன்.

''அது எனக்குத் தெரியாது,'' என்றான் எனக்குக் கருக்குத் தந்த கிழவன்.

அவன் சொன்ன கதை இன்னும் என் நினைவை விட்டு அகலவில்லை.

– 1936